Phone: No. 2241 தின இதழ் Regd. No. M. 5934

### சீனப் பிரதமர் கல் சுமந்தார்

பீகிங், ஜூன் 25—
சீனாவில் கட்டப்பட்டுவரும் பிரம்மாண்டமான மிங்டாம் நீர்த்தேக்கத் திட்டத்தில் மந்திரிகள், அதிகாரிகள், கம்யூனிஸ்ட் தலைவர்கள் 540 பேர் கோஷ்டியுடன் சீனப்பிரதமர் சூஎன்-லாய் வேலை செய்தார். கற்கள் சுமந்தும் உதவினார்.


# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

மலர் 14] பக்கம் 4 : : விலை அணா 1 [இதழ் 306


### கி. பாகிஸ்தானில் ஜனாதிபதி ஆட்சி

கராச்சி, ஜூன் 25—
கி. பாகிஸ்தானில் ஜனாதிபதி ஆட்சியைப் பிரகடனம் செய்யும் அறிக்கை ஒன்றை ஜனாதிபதி இஸ்கந்தர் மிர்ஸா வெளியிட்டுள்ளார். அரசியல் சட்டப்படி கி. பாக். சர்க்கார் நடத்த முடியாததே காரணம் என்று அவர் கூறுகிறார்.

சென்னை 26-6-58 விளம்பி, ஆனி-12 வியாழன் (வெளியூர் 27-6-58 விளம்பி, ஆனி-13 வெள்ளி)

# துரிதமாக நியாயம் வழங்குவோம்!

## என் ஆதரவும் அனுதாபமும் தொழிலாளர்பால் உண்டு

## பிரதமர் நேருவின் வாக்குறுதியால் வேலைநிறுத்தம் முடிவுற்றது

### ஏ. எஸ். கே. அய்யங்கார் தரும் தகவல்

சென்னை, ஜூன் 26—
"க்ஷேமநல சர்க்கார் என்று சொல்லுகிறோம். ஆனால் தொழிலாளர்களின் க்ஷேமநலத்தைக்கூட கவனிக்க முடியவில்லை. 10 வருடமாக 3-ம் வகுப்பு, 4-ம் வகுப்பு ஊழியர்களின் வாழ்க்கை நிலைமையை உயர்த்த முடியவில்லை. ஒரே ரக தொழிலுக்கு வெவ்வேறு விதமான கூலி கொடுப்பது முறையல்ல. நான் தொழிலாளர் பக்கம் இருக்கிறேன். எனது நல்லெண்ணமும் ஆதரவும் தொழிலாளர்பால் இருக்கிறது என்று சொல்லுங்கள்.

ஜூலை 14-ம் தேதி முக்கூட்டு மகாநாடு நடைபெறவிருக்கிறது. அதில் உங்கள் கோரிக்கைகளெல்லாம் சுமுகமாகத் தீர்த்துவைக்கப்படும். ஆகவே வேலைக்குத் திரும்புங்கள்" என்று வாக்குறுதியளித்து பிரதமர் நேரு, சம்மேளனத் தலைவர்களிடம் கேட்டுக்கொண்டார்.

பிரதமர் நேருவின் வாக்குறுதியில் நம்பிக்கை வைத்து சம்மேளனத் தலைவர்கள்கூடி வேலைநிறுத்தத்தை வாபஸ் செய்வதென முடிவு செய்தார்கள்.

அகில இந்திய துறைமுக-டாக் வேலைநிறுத்தம் சம்பந்தமாக பிரதமர் நேருவிடம் நடைபெற்ற விவாதத்தில் கலந்து கொண்டு இன்று காலை சென்னை தலைவர்களான எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளையும், ஏ. எஸ். கே. அய்யங்காரும் சென்னை வந்து சேர்ந்தனர். தலைவர் ஏ. எஸ். கே. அய்யங்காரை நமது நிருபர் பேட்டி கண்டபோது, ஏ. எஸ். கே. கூறியதாவது:—

#### நேருவை சந்தித்தோம்

"பம்பாயில் ஜூன் 23-ம் தேதி சம்மேளன நிர்வாகக் கமிட்டி கூடி, பிரதமர் நேருவிடமிருந்து வந்த தந்தியை விவாதித்தது. அந்த தந்தியில் தொழிலாளர்களுக்கு நியாயம் வழங்க வேண்டுமென்பதுதான் தன் கருத்து என்றும் அதற்காக முழு முயற்சியும், செய்ய சித்தமாக இருப்பதாகவும், தெரியப்படுத்தி யிருந்தார். அந்த தந்தியில் அவரது கருத்து தெளிவாகப் புலப்பட்டதால், நேரிடையாக புதுடில்லிக்குச் சென்று நேருவைச் சந்திப்பதென முடிவு செய்தோம்.

அன்றிரவே, விமானத்தில் சென்று அடுத்த நாள் (நேற்று) மாலை அன்னிய விவகார மந்திரி காரியாலயத்தில் நேருவைச் சந்தித்தோம். அவர் எங்களை நல்ல முறையில் வரவேற்று நட்பான முறையில் விவாதித்தார். பிரதமர் நேரு, போக்குவரத்து மந்திரி எஸ். கே. பாடீல், உதவி மந்திரி ராஜ்பகதூர் ஆகியோர் கலந்து கொண்டனர்.

3-வது 4-வது வகுப்பு தொழிலாளர் நிலைமைக்கு நேரு மேலே கண்டவாறு வருத்தம் தெரிவித்ததுடன், நிச்சயம் குறைகளைத் தீர்ப்பதாகவும், ஜூலை 14-ல் முக்கூட்டு கமிட்டியில் பரிசீலிக்கப்படுமென்றும் கூறி, வேலைநிறுத்தத்தை வாபஸ் பெறுமாறு சொன்னார்.

அதற்கு சம்மேளனப் பிரதிநிதிகளில் ஒருவர், "இவ்வளவு தியாகம் செய்துபோராடிய தொழிலாளர்களுக்கு நீங்கள் இப்பொழுது என்ன கொடுக்கிறீர்கள்?" என்று கேட்டார். அதற்கு நேரு "என்னுடைய அனுதாபம் மிகுந்த ஆதரவு தொழிலாளர் பக்கம் இருக்கிறது என்று சொல்லுங்கள்" என்று உறுதியளித்தார்.

#### பழிவாங்கல் இல்லை

இரண்டாம் நாள் (நேற்று) விவாதத்தில், "வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டவர்களைப் பழிவாங்

(3-ம் பக்கம் பார்க்க)

கேரளத்தில்:

## தொழிலாளர்களுக்கு உத்திரவாதம் போனஸ், கிராஜுவிடி

### தொழில் உறவு போர்டு அங்கீகாரம் சீக்கிரமே மசோதா வெளிவரும்

திருவனந்தபுரம், ஜூன் 25—
கேரளத் தொழிலாளர்களுக்கு இனிஉத்திரவாதமான போனசும், கிராஜுவிடியும் கிடைக்கும். இது சம்பந்தமாக தொழிலாளர் மந்திரி டி. வி. தாமஸ் தலைமையில்கேரள தொழில் உறவு போர்டு நேற்று கூடி முடிவெடுத்துள்ளது. ஒவ்வொரு தொழில் நிறுவனத்திலும் வேலைக் கமிட்டிகளும், பேச்சு வார்த்தை ஸ்தாபனங்கள் அமைக்கவும் போர்டு தீர்மானித்துள்ளது.

கேரளத்தில் ஒவ்வொரு தொழிலாளிக்கும் குறைந்தபட்சம் $1\frac{3}{4}$ ரூபாயாவது கூலி இருக்கவேண்டுமென்று ஏற்கனவே போர்டு முடிவு செய்திருப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

#### கொடுபடாத சம்பளம்

சர்க்கார், முதலாளிகள், தொழிலாளிகள் ஆகியோர்களது பிரதிநிதிகள் அடங்கிய இந்த போர்டு கூட்டம் எர்ணாகுளத்தில் இரண்டு தினங்கள்கூடி நேற்று முடிவடைந்தது. போனஸ் என்பது கொடுபடாத சம்பளம் என்கிற வகையில் தொழிலாளர்களுக்கு உத்திரவாதமாக போனஸ் கொடுக்கவேண்டும் என்பதை போர்டு ஏற்றுக்கொண்டது இது தவிர லாப அடிப்படையில் உபரி போனஸ் தரப்படவேண்டும்என்பதையும் போர்டு ஒப்புக்கொண்டது. ஆனால் இதற்கான விதிமுறைகளை அடுத்த கூட்டத்தில் வகுப்பதென்று முடிவு செய்யப்பட்டது.

#### கிராஜுவிடி திட்டம்

கிராஜுவிடி பற்றி போர்டு ஒப்புக் கொண்டுள்ள திட்டப்படி 5 வருட சர்வீஸ் நிரம்பிய ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஒவ்வொரு வருடத்திற்கும் தினம் 1 ரூபாய் வீதம் 12 நாள் சம்பளம் கிராஜுவிடியாகக் கிடைக்கும். ஆனால் கிராஜுவிடி பற்றி சட்டம் நிறைவேறிய பிறகு அப்போதுள்ள சம்பள விகிதத்தில் வருடத்திற்கு 10 நாள் சம்பளம் கிராஜுவிடியாகக் கிடைக்கும். பிராவிடண்ட் பண்ட் திட்டம் அமுலிலுள்ள தொழிற்சாலைகளுக்குத்தான் இந்த முறை பிராவிடண்ட் பண்ட் திட்டம் அமுலில்லாத தொழிற்சாலைகளில் வருடத்திற்கு 15 நாள் சம்பளத்தை தொழிலாளர்கள் கிராஜுவிடியாகப் பெறுவார்கள். கிராஜுவிடிப் பெற அதிகப்பட்ச காலம் 30 வருடங்களாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

தொழிலாளர்கள் வேலையிலிருந்து ஓய்வு பெறும்போது அவர்களுக்கு உத்திரவாதமாக கிராஜுவிடி கிடைக்க சர்க்கார் ஆவன செய்வதோடு முதலாளிகளிடமிருந்து இந்த கிராஜுவிடியை முறையாக வசூலிக்க தக்க அதிகாரிகளை நியமிக்கும்.

தொழில் நிறுவனங்களில் பேச்சுவார்த்தை ஸ்தாபனங்கள்

(3-ம் பக்கம் பார்க்க)

## அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவது மகத்தான ஒரு போராட்டம்

### 'எக்ஸ்பிரஸ்' பத்திரிகை புகைச்சல் பழசாகிப்போன வாதமே

### இ. எம். எஸ்.யை பகிரங்கமாகவே பாராட்டினேன்; ராஜாஜியின் சூடான பதில்

சென்னை, ஜூன் 25—
அணு ஆயுதங்களைத் தடை செய்யவேண்டும், சோதனைகளை நிறுத்த வேண்டும் என்பது மகத்தான ஒரு போராட்டம். தருமப் போராட்டம் இதில் உலகப் பிரசித்திபெற்ற அறிஞர்கள் பெர்ட்ரண்ட் ரஸல், டாக்டர் ஆல்பர்ட் ஷ்விட்ஸர் முதலியோர் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இந்தப் பிரச்சினையை ஒட்டி நடைபெறும் ஸ்டாக்ஹோம் (உலக சமாதான) மகாநாடு ஒவ்வொருவரும் கலந்து கொள்ளத் தகுதி வாய்ந்தது. இதை மக்களுக்கு எடுத்துச் சொல்லவே சென்னையில் தயாரிப்புக் கமிட்டியின் கூட்டம் நடைபெற்றது.

இதில் நான் கலந்துகொண்டதை ஆட்சேபித்து நீங்கள் தலையங்கம் எழுதியிருக்கிறீர்கள். இது பழங்காலப் போக்கு என்று நான் கூறுகிறேன். உங்களது வாதத்தை நிராகரிப்பதற்கு ஆங்கில வசன இலக்கியத்தில் இன்னும் கடுமையான சொற்கள் இருக்கின்றன. ஆனாலும் இது பழங்கால வாதம் என்று மட்டும் கூறுகிறேன் என்று இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் ஏயும் இலட்டும் என்ற பகுதியில் எழுதியிருந்த தலையங்கத்தைப் பற்றி ராஜாஜி எழுதியுள்ள கடிதம் ஒன்றில் குறிப்பிடுகிறார்.

இந்தத் தயாரிப்பு மாநாட்டைத் தொடங்கி வைப்பதற்கு அழைக்கப்பட்டவர் ஒரு கம்யூனிஸ்டான இ. எம். சங்கரன் நம்பூதிரிப்பாட் என்பதால் இதில் நான் கலந்து கொள்ளக் கூடாதா? என்று ராஜாஜி கேட்கிறார்.

உங்களது தலையங்கத்தில் ஒரு கட்சிப் பார்வையுடன் எழுதியிருந்த தலையங்கத்தின் வாதங்களால் தவறான வழிக்கு இழுக்கப்படுவதை. அணு ஆயுத சோதனைகளை நிறுத்துவது, அணு ஆயுதங்களைத் தடைசெய்வது பற்றியவிஷயத்தில் நான் அதிக அக்கறை கொண்டிருக்கிறேன் என்கிறார் ராஜாஜி.

திரு. சங்கரன் நம்பூதிரிப்பாடை

(2-ம் பக்கம் பார்க்க)

## துறைமுக சமரச பேச்சு வெற்றிகரமாக முடிந்தது

புதுடில்லி, ஜூன் 25—
ஜூன் 16-ம் தேதி நள்ளிரவிலிருந்து நடைபெற்றுவரும் $1\frac{1}{2}$ லட்சம் துறைமுகத் தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் வாபஸ் வாங்கப்படுகிறது. தொழிலாளர்களுக்கு நீதி வழங்கப்படும் என்று பிரதம மந்திரி நேரு திட்டவட்டமாக வாக்குறுதியளித்ததின்பேரிலேயே இந்த வேலைநிறுத்தம் வாபஸ் பெறப்படுகிறது. தொழிலாளர்களின் நியாயபூர்வமான கோரிக்கைகள் நிறைவேற்றப்படும் விஷயத்தில் தாம் சொந்தப் பொறுப்பு ஏற்றுக்கொள்வதாகவும் நேரு தெரிவித்துள்ளார்.

ஸ்டிரைக் வாபசாகும் நற்செய்

(3-ம் பக்கம் பார்க்க)

## எச்சரித்த சில நிமிஷங்களில் தடியடி, புகை, துப்பாக்கிச்சூடு

### துப்பாக்கிப் பிரயோக விசாரணையில் இன்ஸ்பெக்டர் சாட்சியம்

சென்னை, ஜூன் 26—
சென்னை துறைமுகத் தொழிலாளர்மீது நடத்திய துப்பாக்கிப் பிரயோகம் சம்பந்தமான கமிஷன் விசாரணை இரண்டாவது நாளாக நேற்று எழும்பூர் பிரதம மாகாண மாஜிஸ்ட்ரேட் முன் நடைபெற்றது.

முதல் நாள் சாட்சியமளித்த ஹார்பர் போலீஸ் இன்ஸ்பெக்டர் சந்திரசேகரனை, துறைமுக ஐக்கிய தொழிலாளர் சங்கம், ஹார்பர் தொழிலாளர் சங்கம் ஆகியவை சார்பில் ஆஜரான பாரிஸ்டர் மோகன் குமாரமங்கலம் குறுக்கு விசாரணை செய்தார். அவருடன் வக்கீல்கள் கே. வி. சங்கரனும், நடராஜனும் ஆஜராயினர். மதராஸ்போர்ட்டிரஸ்ட் எம்ப்ளாயீஸ் யூனியன் சார்பில் திரு. ஜான் தாமஸ் குறுக்கு விசாரணை செய்தார்.

மோகனின் குறுக்கு விசாரணையானது, "தடியடிக்குமுன் கூட்டத்தினரைக் கலைந்து போகும்படி எவ்வளவு நேரம் எச்சரிக்கை கொடுக்கப்பட்டது? சுடுவதற்கு முன் எவ்வளவு நேரம் எச்சரிக்கை கொடுக்கப்பட்டது?" என்ற விஷயங்களும், "துப்பாக்கிப்பிரயோகம் எந்தெந்த தெருக்களிலும், எந்

(4-ம் பக்கம் பார்க்க)

# ஜனசக்தி

சென்னை 26-6-1958


## பரிகாரம் என்ன?

தமிழ்பற்றி இலங்கை கவர்னர் ஜெனரல் ஆலிவர் குணதிலகா நேற்று நடைபெற்ற பார்லிமெண்ட் கூட்டத்தில் ஒரு அறிவிப்பு வெளியிட்டிருக்கிறார். அதாவது, தமிழின் நியாயமான உபயோகத்துக்கு சீக்கிரமே இலங்கை சர்க்கார் சட்டம் கொண்டு வரும் என்று தெரிவித்துள்ளார்.

இந்த அறிவிப்பின் உள்ளடக்கம் புதிதல்ல; ஏற்கனவே இதேபோன்ற ஒரு வாக்குறுதியை சென்ற வருடம் இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகா வெளியிட்டது அனைவருக்கும் தெரியும்.

ஆகவே இப்போதுள்ள பிரச்னை வெறும் வாக்குறுதிகள் அல்ல; அதற்குப் பதில் இந்த வாக்குறுதிகள் எந்த அளவுக்கு அமுல் நடத்தப்படுகின்றன என்பதுதான் பிரதான, ஜீவாதாரமான விஷயம்.

பண்டாரநாயகா சென்ற ஆண்டு அளித்த வாக்குறுதியைக் காலதாமதமின்றி நிறைவேற்றியிருந்தால் இலங்கையில் தற்போது ஏற்பட்டிருப்பது போன்ற அசம்பாவிதங்கள் நிகழ்ந்திருக்காது. இதிலே இலங்கை சர்க்கார் அனாவசிய தாமதம் காட்டியதின் விளைவாகத்தான், சிங்களவர் தமிழர்களுக்கிடையேவேண்டாத சந்தேகங்களும் தப்பபிப்பிராயங்களும் முற்றி இலங்கையையே அல்லோல கல்லோலப்படுத்தும் பெரு நெருப்பாக மூண்டுவிட்டது.

இந்நிலையில் இந்த நெருப்பை அணைத்து, இலங்கையில் சௌஜன்யத்தை நிலைநாட்ட வேண்டுமானால் இனியும் காலம் தாழ்த்தாது சர்க்கார் முன்பு அளித்த வாக்குறுதியை உடனடியாக அமல் நடத்த முன்வரவேண்டும். யார் மீது குற்றம்? தமிழர் மீதா, அல்லது சிங்களவர் மீதா என்று இண்டிக் கிளறிக் கொண்டிராமல் இரு தரப்பாரையும்தாமதமின்றி அழைத்துப் பேச்சுவார்த்தைகள் நடத்தி, மொழிப் பிரச்னைமீது ஒரு சுமுகமான முடிவுக்கு வர வேண்டும்.

இதுதான் இன்றைய நிலையில் இலங்கையில் ஏற்பட்டுள்ள நெருக்கடிக்கு உண்மையான பரிகாரமாகும். இந்தப் பரிகாரத்தின் அடிப்படையில் பிரச்னையை சிக்கறுத்து சம்பந்தப்பட்ட அனைவருக்கும் நியாயம் வழங்குவதுதான் சிறந்த அரசியல் விவேகமாகும்.

இதைவிட்டு அடக்குமுறையினால், ராணுவ, போலீஸ் பலத்தால் இந்தப் பிரச்னையை தீர்த்துவிட முடியும் என்று நினைப்பது பெரிய ஆபத்தில் போய்முடியும். அது மட்டுமல்ல, இந்த விபரீதபோக்கு இருதரப்பிலுமுள்ள சுயநல, பிற்போக்குசக்திகளை ஊடுபிவிட்டு மேலும் பேயாட்டமாடவும் வழிவகை செய்துவிடும். அதோடு இந்தியா-இலங்கை நல்லுறவை சீர்குலைக்க சதி செய்து கொண்டிருக்கும் ஏகாதிபத்திய வாதிகளதுகரங்களையும் வலுப்படுத்தி விடும். எனவே இவற்றையெல்லாம் மனதில் வைத்து இலங்கை சர்க்கார் விவேகத்தோடு நடந்துகொள்வார்கள் என்று நம்புகிறோம்.

## இலங்கையில் தமிழ் மொழி பற்றி மசோதா வரும் கவர்னர் ஜெனரல் அறிவிப்பு

கொழும்பு, ஜூன் 24—

இலங்கைப் பாராளுமன்றத்தில் இலங்கை சர்க்காரின் கொள்கையைத் தெளிவுபடுத்தும் விதத்தில் கவர்னர்-ஜெனரல் பேசியுள்ளார். தமிழ் மொழி நியாயமான அளவு உபயோகிக்கப் படுவதற்கு உத்தரவாதமளிக்கப்படும் என்றும், இதற்கான மசோதா சீக்கிரமே வரும் என்றும் அறிவித்தார்.

## தூத்துக்குடி சட்டசபை உபதேர்தல்

### அங்கத்தினர்களே உங்கள் கடமை என்ன?

சென்னை, ஜூன் 26—

தூத்துக்குடி உபதேர்தல் நடைபெறுவதற்கு இன்னும் ஒருமாத காலமே உள்ளது. ஆயினும் நாம் செய்யவேண்டிய வேலையோ அனந்தம். குறுகிய காலத்தில் பெருமளவு வேலைசெய்வது உங்கள் ஒவ்வொருவருடைய முயற்சியைப் பொறுத்ததே. தேர்தல் நிதிக்குக் கட்சிக் கிளைகள் ஒவ்வொன்றும் குறைந்தது ரூபாய் ஐந்து அனுப்ப வேண்டுமென்ற மாகாணக் கமிட்டியின் வேண்டுகோளை ஜனசக்தியில் பார்த்திருப்பீர்கள். மாற்றுக் கட்சிக்காரர்களின் பண பலம், பிரச்சார பலத்தை எதிர்த்து, அவர்களுடைய அவதூறுகளுக்கு அவ்வப்பொழுது பதிலிறுத்து துண்டுப்பிரசுரங்கள் போஸ்டர்கள் கொண்டு வருவதற்கும், நமது பிரச்சாரத்தைச் செவ்வனே நடத்துவதற்கும் பணம் உடனடியாகத் தேவைப்படுகிறது. பொது மக்களிடத்தும், கஸ்பர்களிடத்தும், அனுதாபிகளிடத்தும் நிதிவசூலித்து உடனே அனுப்புக.

பணவெறியர்களையும், இன வெறியர்களையும் எதிர்த்து ஜனநாயக சக்தி வெற்றிபெற பணம் வசூலித்தனுப்புகிறோம் என பல தோழர்களிடமிருந்து கடிதம் வந்த வண்ணமிருக்கிறது. இன்றே—இன்றும் இன்னே செயல்படுக.

## தூத்துக்குடி உப-தேர்தல் நிதி

**சென்னை :**

| | |
|---|---|
| அமிஞ்சிக்கரை தோழர்கள்: டி. ஏ தாமோதரன்-சுகுணை திருமணத்தின்போது தோழர் மாயாண்டி பாரதி மூலம் | ரூ 5-00 |
| சரோஜா எலக்ட்ரிக் ஒர்க்ஸ் தோழர் வி. குருசாமி | ரூ 2-00 |
| தோழர் வி குருசாமி மூலம் ஒரு நண்பர் | ரூ 2-00 |
| தோழர் சீனிவாசன் | ரூ 1-00 |
| மூலக்கரை நடேசன் அணா 8; அவர் நண்பர் அணா 8; | ரூ. 1-00 |

**கோவை :**

| | |
|---|---|
| திருப்பூர் நகர் கமிட்டி ரூ. 5; எம் ஓ. கமிஷன்போக | ரூ. 4-50 |
| இராசிபாளையம் கட்சிக் கிளை | ரூ. 5-80 |

**சேலம் :**

| | |
|---|---|
| மேட்டூர் டவுன் கமிட்டி | ரூ. 5-00 |

## வாளும் கேடயமும்

## தினத்தந்தியும், இனக் கலகமும்

சில "தலைவர்கள்" இருக்கிறார்கள். அவர்கள் பொதுமக்களுக்கு சேவை செய்த தலைவர்களான தலைவர்கள் அல்ல. தன் சொந்த ஜாதி மக்களுக்கு எந்த நன்மையும் செய்யாமல், தன் ஜாதி மக்களுக்கும் இன்னொரு ஜாதி மக்களுக்குமிடையே பகையைத் தூண்டிவிட்டு மோதச் செய்து, அந்த மோதலிலே பெரும் புகழும் பெற்று பெருந்தலைவர்கள் ஆனவர்களுமுண்டு. அதுபோல, தன் இன மக்களைக் காப்பதாகச் சொல்லிக்கொண்டே, பிற இனத்து மக்களுக்கும் தன் இனத்து மக்களுக்குமிடையே பகையையும் சந்தேகத்தையும் பயத்தையும் மூட்டிவிட்டு தன் இனத்து மக்களுக்கு அடியும் உதையும் அவமானமும், அவலமும் ஏற்படச் செய்யும் பெருந் தலைவர்களுமுண்டு. தலைவர்கள் மட்டுமல்ல, அப்படிப்பட்ட பத்திரிகைகளும் உண்டு.

அப்படிப்பட்ட பத்திரிகைகளில் ஒன்று தினத்தந்தி பத்திரிகை. அப்படிப்பட்ட தலைவர்கள் யார் என்று நேயர்கள் அறிவார்கள். விஷயத்துக்கு நேரே வருவோம்.

'கேரளத்தில் தமிழ் மாணவர்கள் அவதி! தமிழ்ப் பாடபுத்தகம் கிடைக்காமல் திண்டாட்டம்!' என்று தலைப்பிட்டு, கேரளத்தில் பள்ளிக்கூடங்கள் திறந்து 3 வாரமாகியும் தமிழ்ப் பாடபுத்தகங்கள் கிடைக்கவில்லை. ஆனால் மலையாள பாட புத்தகங்களை சர்க்கார் அச்சிட்டு தலைமை ஆசிரியர்கள் மூலம் மாணவர்களுக்கு விற்பனைப் படுகிறது' என்று தினத்தந்தி செய்தி வெளியிட்டுள்ளது. இதைப் படித்தவர்கள் என்ன நினைப்பார்கள்? கேரளக் கம்யூனிஸ்ட் சர்க்கார் தமிழ் மாணவர்களைப் புறக்கணித்து, மலையாள மாணவர்களுக்கு நன்மை செய்யும் வருகிறது என்று நினைப்பார்கள். 'இப்படி நினைக்கட்டும் கம்யூனிஸ்ட் ஆட்சிக்கு கெட்ட பேர் வரட்டும்' என்ற முறையில்தான் தினத்தந்தி செய்தி வெளியிட்டுள்ளது.

ஆனால் உண்மை என்ன? கேரள ராஜ்யப் பாடசாலைகளுக்கான பாட புத்தகங்களை கள்ள மார்க்கெட்டில் விற்கப்படாமலிருக்க ஆசிரியர்—மாணவர் அடங்கிய கூட்டுறவு சங்கங்கள் மூலமாக வினியோகிக்க சர்க்கார் நடவடிக்கை எடுத்திருக்கிறது. இந்தமுறை புதிதான காரணத்தால் காலதாமதம் ஏற்பட்டுள்ளது. அது தவிர புத்தகங்கள் இல்லையென்ற நிலைமை இல்லை. அங்கு போவானேன்! சென்னை ராஜ்யத்திலேயே பாடப் புத்தகங்கள் கிடைக்காமலும், உரிய விலையில் கிடைக்காமலும் திண்டாடும் மாணவர்களுக்கு கணக்கு வழக்கு உண்டா?

அதுமட்டுமல்ல, தேவிகுளம் தேர்தல் சமயத்தில் "தமிழர்களையெல்லாம் மலையாளம் படித்து மலையாள கலாச்சாரத்தைக் கைக்கொள்ளவிட்டால், அழிந்து போவீர்கள்" என்று மந்திரி கிருஷ்ணய்யர் கூறியதாக ஒரு பொய்ச் செய்தியையும் இதே தினத் தந்தி தான் வெளியிட்டது. நான் அப்படிச் சொல்லவே இல்லையென்று மந்திரி கிருஷ்ணய்யர் விடுத்த மறுப்பு அறிக்கையை இந்த தினத்தந்தி வெளியிடவுமில்லை. இந்தப் பொய்ப் பிரச்சாரமும் எதற்காக? காங்கிரஸை பயன்படுத்திக் கொள்ளுவதற்காக! மலையாளிகள் மேல் தமிழ் மக்கள் பகையும் அவநம்பிக்கையும் கொள்ளச் செய்வதற்காகத்தானே!

அதுமட்டுமல்ல கேரளத்துக்கு தமிழ்நாட்டு அரிசி போவதைப் பற்றியும் விடாமல் கண்டித்து தலைப்பட்டம் போட்டு தலையங்கம் எழுதியும் வருகிறது தினத் தந்தி. கேரளத்தில் நெல் விளைச்சலே இல்லாத, தேயிலை, காப்பி, ஏலத் தோட்டங்களிலே மாத்திரமே வேலை செய்யக் கூடிய பல லட்சக்கணக்கான தமிழ் மக்களுக்கும் இந்த அரிசி கிடைக்கிறது என்பதாவது தினத் தந்திக்கு தெரியாதா? தெரிந்தும் இப்படி எழுதுவானேன்? தமிழ்நாட்டு மக்களை கேரள மக்கள் மீது வெறுப்படையச் செய்வதற்காகத்தானே!

பரம்பிக்குளம், சோலையாறு தண்ணீர் பேச்சுவார்த்தை இன்னும் முடிவடையாமல் இருக்கும் போது இரு ராஜ்ய மக்களும் இரு சாராருக்கும் நன்மைஎன்ற அடிப்படையில் சுமுகமாகத்தீர்க்கப்பட வேண்டிய பிரச்னையாக இருக்கும்போது — மலையாளிகள் மேலேயே குற்றத்தைச் சுமத்தி, 'மலையாளிகள் கைவிரிப்பு' 'மலையாளிகள் பிடிவாதம்' என்று தலைப்புகள் கொடுத்து செய்திகளை வெளியிடுகிறது தினத்தந்தி.

இதுபோலவே, 'தமிழ் மாணவர்களுக்கு தமிழ் வாத்தியார்கள் இல்லை' என்றும் கூறியது. அதாவது இதற்குமுன் இருந்ததுபோல அது, இப்பொழுது அதை எடுத்து விட்டதுபோலவும் சித்தரித்தது. கேரள சர்க்கார்மீதும் மலையாள மக்கள்மீதும் வெறுப்பை உண்டு பண்ணுவதற்காகத்தான் இப்படிச் செய்தது.

### உண்மை என்ன ?

ஆனால் உண்மை என்ன? தேவிகுளம் பீர்மேடு முழுவதும் கண்ணன்தேவன் கம்பெனி போன்ற தனிப்பட்ட முதலாளிகளின் சொத்தாக இருக்கிறது. அவர்களிடம் நிலத்தை சர்க்கார் விலைக்கு வாங்கி வீடுகட்டி ஆனபிறகுதான் தமிழ் ஆசிரியர்களுக்கு போதிய அளவில் ஏற்பாடு செய்யவேண்டியிருக்கிறது. இது கஷ்டமான காரியமாக இருந்த போதிலும் கேரளசர்க்கார் புதிய தமிழ் ஆசிரியர்கள் பலரை நியமித்துள்ளது. மொழிப் பிரச்னையில், தமிழர் வாழும் பிரதேசத்தில் தமிழையே நிர்வாக மொழியாக்கி விட்டார்கள்.

நிலைமை இதுவாக இருக்க, பரம்பிக்குளம் தண்ணீர், தேயிலை தோட்டத்துக்கு அரிசி, தமிழ் ஆசிரியர், தமிழ்ப் பாட புத்தகம், தமிழ் மொழி ஆகிய பிரச்னைகளில் தமிழ் மக்களுக்கு ஏதோ நன்மை செய்ய அவதாரமெடுத்திருப்பதாகப் பாவனை காட்டி தமிழர்களுக்கும் மலையாளிகளுக்கும் இடையே வெறுப்பையும் பூசலையும் கிளப்பிவிட தினத்தந்தி முயல்வது ஏன்?

அதேபோலத்தான், அகில இந்திய மக்களும், ஆந்திரர்களும், கன்னடர்களும் தமிழர்களை அடித்து, மண்டையை உடைத்து, பூட்ஸ் காலால் மிதித்து விரட்டுவதாக தினத்தந்தி படம் போட்டிருக்கிறது. இந்தபடத்தைப் பார்த்த அந்த ராஜ்ய மக்கள் என்ன நினைப்பார்கள்? தமிழர்கள் ஏனைய ராஜ்ய விரோதிகள் என்ற முறையில்தானே பார்க்கச் சொல்லும்.

### இலங்கையிலும்

இலங்கை இந்தியர் பிரச்னையிலும் சரி, இலங்கையின் தமிழர் வாழும் பகுதியைப் பிரித்து தமிழ் நாட்டுடன் சேர்த்துவிட வேண்டுமென்ற பிரச்சாரத்தை தினத்தந்தியும் "நாம் தமிழர்" ஆதித்தனும் செய்துவருகிறார்கள். அமெரிக்கர்களும், பிரிட்டிஷ்காரர்களும் ஒரே மொழிபேசுபவர்களாக இருந்தபோதிலும் கூட எப்படி ஒரு தேசத்தவராக ஆகமுடியவில்லையோ, அதுபோல இலங்கைத் தமிழர்களும், தமிழ்நாட்டுதமிழர்களும் ஒரே மொழியையே பேசினாலும் ஒரு நாட்டவராக ஆகமுடியாது. கிலப்பரப்பாலும், ஒரு வரலாதாரத்தொடர்பினாலும், நவீன வரலாற்றினாலும் அவர்கள் இலங்கையர்தான்! இலங்கைதான் அவர்களது தாய்நாடு! சிங்களவர் தமிழர் சச்சரவு ஒரே தேசத்திற்குள் தீர்க்கப்படக் கூடிய ஒரு உள் நாட்டு விவகாரம். அதில் இரு தரப்பாரும் பரஸ்பரம் நியாயங்களை அங்கீகரித்து, பொதுவான தேசபக்த கடமைகளைச் செய்யவேண்டுமென்று கோருவது தான் சரியே தவிர, பிரிவினை கோஷமெழுப்புவது எப்படி சரியாகும்? இதன் விளைவு என்னவாகும்? தமிழர்களின் தேசபக்தியில் சிங்களவர்களுக்கு சந்தேகமும், தமிழ் மக்கள்மீது பகையும் தானே ஏற்படும்?

ஆதலால்தான், தினத்தந்தியின் இனவெறிப் போக்கு, எல்லா ராஜ்யங்களிலும் இலங்கை நாட்டிலுமுள்ள தமிழ் மக்களுக்கு ஆபத்தை உண்டாக்கும் போக்கு என்று எச்சரிக்கிறோம். இலங்கையிலும் இதர ராஜ்யங்களிலுமுள்ள ஜனநாயகவாதிகளின் கையை பலப்படுத்தி, தமிழர்களின் நியாயமான உரிமைகளைக் காப்பதுதான் சரியான வழியாகும்.

தமிழர்களின் கஷ்டங்களைப் பயன்படுத்தி, தமிழர்களிடத்தில் ஆத்திரத்தையும் உணர்ச்சியையும் தூண்டிவிட்டு, பத்திரிகை விற்பனையைப் பெருக்கி, குறுக்கு வழியில் பெரும் பொருளும் கீர்த்தியும் தினத்தந்தியும் தேடும் அரசியலில் தமிழ் மக்கள் உஷாராக இருக்கவேண்டும்!

—ஐ. மா. பா.

## தூத்துக்குடி தேர்தல் பிரச்சாரப் பொதுக்கூட்டம் சங்குகுளித் தொழிலாளருக்கு கம்யூனிஸ்டுகள் சேவை

தூத்துக்குடி, ஜூன் 21—

தூத்துக்குடி திரேஸ்புரத்தில் கம்யூனிஸ்ட் கட்சி தேர்தல் பிரச்சாரக் கூட்டம் 20-6-58-ல் நடைபெற்றது. கூட்டத்திற்கு தோழர் பி வி. சந்தனராஜ தலைமை வகித்தார். சங்குகுளித் தொழிலாளர்களுக்கு கம்யூனிஸ்டு கட்சி ஊழியர்கள் செய்த சேவையைப் பற்றியும், சங்குகுளித் தொழிலாளர்களுக்காக என்றென்றும் கம்யூனிஸ்டு கட்சி தொடர்ந்து பாடுபடும் என்றும் தோழர் பி. இஸ்மாயில் பேசினர்.

அடுத்து விருதுநகர் தோழர் பாரிபெக் மாரியப்பா அவர்கள் பேசும்பொழுது, தொழிலாளர்கள் மத்தியில் கம்யூனிஸ்ட் கட்சி எவ்வாறு சேவை செய்து வருகிறது என்பதைப் பற்றியும், தேவிகுளம் பீர்மேடு தொகுதி மக்கள் கதிர் அரிவாள் பெட்டியில் ஓட்டளித்து வெற்றி வாகை சூடியதைப்பற்றியும் எஸ். ஏ. முருகானந்தத்திற்கு ஓட்டளித்து வெற்றிபெறச் செய்ய பொது மக்களை வேண்டிக் கொண்டும் பேசினார்.

சென்னை துறைமுகத் தொழிலாளர்கள் மீது சென்னை சர்க்கார் துப்பாக்கிப் பிரயோகம் செய்து 7 உயிர்களை சாகடித்தது மல்லாமல் 115 பேர்களுக்கு மேல் படுகாயப்படுத்தியதையும் கண்டித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## அணு ஆயுத. . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பாராட்டி நான் கூறிய வார்த்தைகள் மனப்பூர்வமாகக் கூறப்பட்டவை; அவை முற்றிலும் சரி என்பதே என் கருத்து. கட்சி அரசியலைவிட நல் ஒழுக்கம் சிறந்தது என்ற போதனையின் ஒரு பகுதியே இது நல்லொழுக்கமே பிரதானம் என்பதை ஜனசக்தி முழுவதையும்திரட்டி வலியுறுத்தக் கான் விழைகிறேன். அந்த நல்லொழுக்கத்தை திரு. நம்பூதிரிபாடிடம் காண்கிறேன் என்று அவரைப்பற்றி நான் அறிந்ததிலிருந்து உரிமையுடன் கூறமுடியும் என்றும் அவர் கூறுகிறார். எந்தக்கட்சியைச் சேர்ந்தவர்களாயினும் கட்சி அரசியலைவிடமிகவும் அவசியம் என்றும் ஒழுக்கமே பிரதானம் என்றும் உணரவேண்டும் என்று எடுத்துக் கூறியதாக ராஜாஜி எழுதியுள்ளார். கோகலே மண்டபத்தில் தாம் நிகழ்த்திய பேச்சு முழுவதையும் பற்றிக் கவனம் செலுத்தி பி. டி. ஐ. ரிபோர்ட்டுடன் மட்டும் நின்றிருந்தால் நல்லது என்று அவர் கூறுகிறார்.

நாகியின் துரதிருஷ்டமான முடிவு போல பிரிட்டன் இந்தியாவில் ஆட்சி நிர்வாகம் நடத்திய போது பல சம்பவங்கள் நடந்துள்ளன இருந்தும் அமெரிக்கா பிரிட்டனுடன் உறவு கொள்வதை இது தவிர்க்கவில்லை, பிரிட்டனுடன் நாம் உறவு கொள்வதை தவிர்க்கவில்லை என்றும் அவர் சுட்டுகிறார்.

## 3-7-58-ல் அடையாள வேலைநிறுத்தம்

### குந்தா தொழிலாளர் போராட்டம்

குன்னூர், ஜூன் 20—

18-6-58ல் குந்தா அணைக்கட்டுத் தொழிலாளர் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. 3-7-58ல் ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தம் செய்வதென ஏகமனதாக முடிவு செய்யப்பட்டது.

சென்னை சர்க்காரால் நியமிக்கப்பட்ட 'பேச்சுவார்த்தைக் கமிட்டி'யின் சிபார்சுப்படி, அணைக்கட்டு தொழிலாளர் 75 சதவிகிதம் பேர்களுக்கு இடைக்கால நிவாரணம் கொடுக்கப்படவில்லை போதுமான வேலையிருந்தும் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க நிர்வாகம் மறுப்பதுடன், பழிவாங்கும் நடவடிக்கை எடுத்து தொழிலாளர்களை ஆத்திரமூட்டி வருகிறது.

ஜில்லா அதிகாரிகள் முன்னிலையில் ஒப்புக்கொண்டபடி வேலை கொடுக்கவும் நிர்வாகம் அடம் பிடிக்கிறது.

மழை காலம் ஆரம்பமாகப் போவதால், தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் நடவடிக்கையை உடனடியாகச் செய்யவேண்டும்.

காண்ட்ராக்ட் தொழிலாளர்களை உடனடியாக போர்டுதொழிலாளர்களாகப் பதிவு செய்ய வேண்டும்.

எனவே, தேசிய நலனையும், தொழிலாளர் நலனையும் கருத்திற்கொண்டு உடனடியாக கோரிக்கைகள் தீர்க்கப்படாவிட்டால், அடையாள வேலைநிறுத்தம் நடைபெறும் என்று சங்கத்தின் செயலாளர் ப. விருத்தகிரி அறிவிக்கிறார்.

மேலும் தோழர் சக்கரை செட்டியார் மறைவுக்கும்; சென்னை துறைமுகத்தொழிலாளர்மீது ஏவிவிடப்பட்ட துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்தும் மரணமடைந்தோர்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# போலீஸ் கொலைத் தாண்டவத்தை தடுத்து நிறுத்துக

## சென்னை துப்பாக்கிப் பிரயோகத்திற்கு கோவை தொழிற்சங்கங்களின் கண்டனம்

### வாஹினி ஸ்டுடியோவுக்கு இ. எம். எஸ். விஜயம்

### கோடம்பாக்கம் மக்கள் வரவேற்றனர்

சென்னை, ஜூன் 22—

கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் அவர்கள், ஜே. ஜே. ஆர்ட் பிக்சர்ஸார் தயாரிக்கும் புதிய படத்தின் ஆரம்ப விழாவிற்கு வாஹினி ஸ்டுடியோவுக்கு 20-ந் தேதி மாலை 7 மணி அளவுக்கு வந்தார். ஏராளமான படத் தயாரிப்பாளர்களும், சினிமாத் தொழில் நுணுக்க ஊழியர்களும், தொழிலாளர்களும் குழுமியிருந்தார்கள். வரும் வழியில்:

கோடம்பாக்கம் கம்யூனிஸ்ட் கட்சிக் கிளை வரவேற்புக்கு ஏற்பாடு செய்தது. ஏராளமான மக்களும் பெண்களும் கூடினார்கள். கார் கோடம்பாக்கம் பஸ் நிலையத்திற்கு வந்ததும், கட்சிக் கிளை சார்பாக தோழர் எஸ். வி. கௌரிசங்கர் நம்பூதிரிபாட் அவர்களுக்கு மாலையிட்டு வரவேற்றார். பெண்கள் சார்பாக இரா. ஆண்டாளம்மாள் மாலையிட்டு வரவேற்றார்கள்.

ஸ்டுடியோ வாயிலுக்கு கார் வந்ததும், வாஹினி அதிபர் திரு நாகிரெட்டி அவர்கள் இ. எம். எஸ். அவர்களைக் கட்டி அணைத்துத் தழுவி அழைத்துச் சென்றார். படப்பிடிப்பை ஆரம்பிக்க கேமிராவை இ. எம். எஸ். அவர்கள் முடுக்கி வைத்தார். பிறகு சங்கீத அறை, ஸ்டுடியோவின் மற்ற பகுதிகள், பி. என். கே. பிரஸ்ஸின் இயந்திர அறை எல்லாவற்றையும் நாகிரெட்டி அவர்கள் உடனிருந்து காண்பித்தார்.

கோவை, ஜூன் 22—

சென்னையில் சென்ற 16-ந் தேதியன்று துறைமுகத் தொழிலாளிகள் மீது போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம்செய்து 6 தோழர்களைக் கொன்று 200-க்கு மேற்பட்டோரைப் படுகாயப்படுத்திய சென்னை சர்க்கார் போலீசின் மிருகத்தனமான இழி செயலுக்குக் கண்டனம் தெரிவிக்கும் முறையில் நேற்று (21-6-58) மாலையில் இங்கரில் (ஐ என். டி. யு. சி. நீங்கலாக) உள்ள 21 சங்கங்களின் சார்பில் மாபெரும் கண்டன ஊர்வலமும் அதன் இறுதியில் ஆர். எஸ். புரம் கிளப் மைதானத்தில் மாபெரும் பொதுக் கூட்டமும் நடைபெற்றன. கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தின் பொதுச்செயலாளர் தோழர் கே. என். சின்னையன் தலைமை வகித்தார்.

### சக்கரைக்கு அஞ்சலி

காலஞ் சென்ற தொழிற் சங்கத் தந்தை தோழர் வி. சக்கரை செட்டியாருக்கு, கூட்டம் எழுந்து நின்று அஞ்சலி செலுத்திய பின், சென்னை துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்து, அதைப் பற்றி உத்தியோகப் பற்றற்ற பகிரங்க விசாரணை நடத்தி, குற்றவாளிகளைக் கூண்டிலேற்றி தண்டிக்க வேண்டும் என்றும், இறந்த தியாகிகளின் குடும்பங்களுக்கும் காயமடைந்தோருக்கும் நஷ்ட ஈடு கொடுக்க வேண்டுமென்றும், துறைமுகத் தொழிலாளரின் கோரிக்கைகளை உடனடியாகக் கொடுக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்றும் சர்க்காரை வற்புறுத்தி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### பல சங்கங்கள் சார்பில்

கோவை ஜெனரல் இஞ்சினீரிங் அண்டு மெக்கானிகல் தொழிலாளர் சங்கம், மதுக்கரை சிமெண்ட் தொழிலாளர் சங்கம், டீ அண்டு காபி தொழிலாளர் சங்கம், காட்டன் ஜின்னிங் அண்டு ஆயில் மில் தொழிலாளர் சங்கம், எருத் தொழிலாளர் சங்கம், தந்தி தபால் ஊழியர்கள் சங்கம், பாங்க் ஊழியர்கள் சங்கம், மார்க்கெட் தொழிலாளர் சங்கம், பேக்கரித் தொழிலாளர் சங்கம், சாயப் பட்டரைத் தொழிலாளர் சங்கம், மின்சார போர்டு ஊழியர்கள் சங்கம், கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் ஆகிய பல்வேறு சங்கங்களின் சார்பில் சர்க்காரின் கொலை வெறியைக் கண்டித்து, தொழிலாளிகளுக்கு நியாயம் வழங்க சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று வற்புறுத்தி தோழர்கள் பாலன், ஆர். ரங்கசாமி, நல்லப்பன், ஏசைஎன், ராமசாமி, என். மருதாசலம் எம். எல். ஏ., கன்னையன், நாகராஜராவ், தெ. நடராஜன், பி. எஸ். சின்னத்துரை எம். எல். ஏ. ஆகியோர் பேசினர். கோவை ஜில்லா பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம், ஹிந்த் மஸ்தூர் சபா, பிரஜா—சோஷலிஸ்டுக் கட்சி ஆகியவைகளின் சார்பில் தோழர் பி. எஸ். சின்னத்துரை எம். எல். ஏ. அவர்கள் பேசுகையில், துறைமுகத் தொழிலாளர் போராட்டத்துக்கும் அதை நசுக்குவதற்காக சர்க்காரால் நடத்தப்பட்ட நரவேட்டையில் கொல்லப்பட்ட தியாகிகளுக்கும் உதட்டளவில் அனுதாபம் தெரிவிப்பது போதாதென்றும், உருப்படியான உதவியே தேவை என்றும், அதற்காக எல்லா தொழிற்சங்கங்களும், ஜனநாயகவாதிகளும், மனிதாபிமானிகளும் ஒன்றுபட்டு நிவாரண நிதி திரட்டி கணிசமான தொகையை அனுப்பி உதவ வேண்டும் என்றும் வலியுறுத்திப் பேசி, இத்தகைய உண்மையான உதவி செய்யத் தயாரா? என்று கேட்டபொழுது கூட்டத்திற் கூடியிருந்த பல்லாயிர மக்களும் கைகளை உயர்த்தி உதவுவோம் உதவுமோம் எனக் கூறி கரகோஷம் செய்து ஆமோதித்தனர். (ந.நி.)

### துறைமுக...

தியை வெளியே காத்திருந்த பத்திரிகை நிருபர்களிடையே முதன் முதலில் பிரதமர் நேருவே வெளியிட்டார்.

### அதிகார பூர்வமான அறிக்கை

பின்னர் நேற்று இரவு இது சம்பந்தமாக ஒரு அதிகாரபூர்வமான அறிக்கை வெளியிடப்பட்டது. அந்த அறிக்கையில் கூறப்பட்டிருப்பதாவது:

வேலை நிறுத்தம் காரணமாக எவர் மீதும் பழிவாங்கப்பட மாட்டாது; மறியல், ஆர்ப்பாட்டம் முதலியன சம்பந்தமாக தொழிலாளர்கள் மீது தொடரப்பட்டுள்ள வழக்குகள் வாபசாக சர்க்கார் ஆவன செய்யும்.

### வேலை நிறுத்த நாட்கள்

வேலை நிறுத்தம் செய்த தினங்கள் ஒவ்வொரு தொழிலாளருக்குமிருக்கும் ரஜாவில் கழித்துக் கொள்ளப்படும்; அல்லது சம்பளமில்லாத ரஜாவாக பாவிக்கப்படும். கிராமங்களுக்குச் சென்றுள்ள தொழிலாளர்கள் திரும்பி வந்து வேலையில் சேர்வதற்காக மேற்கொண்டு 15 தினங்கள் அவகாசமளிக்கப்படும்.

### பேச்சு வார்த்தைகள்

ஒவ்வொரு துறைமுகத்திலும் ஸ்தல பிரச்னைகள், கோரிக்கைகள் பற்றி சர்க்கார் பேச்சுவார்த்தை நடத்தத் தயாராக உள்ளது. இந்தப் பேச்சுவார்த்தைகள் பலனளிக்கவில்லை என்றால் மத்தியஸ்த தீர்ப்புக்கு விடப்படும்.

அகில இந்திய ரீதியில் துறைமுகத் தொழிலாளர்களின் கோரிக்கைகள் பற்றி பேச்சுவார்த்தைகள் ஜூலை 14-ம் தேதி ஆரம்பமாகும், 17-ம் தேதி ஆரம்பிப்பதென்று ஏற்கனவே முடிவு செய்யப்பட்டிருந்தது. இந்தப் பேச்சுவார்த்தைகளில் ஏற்படும் முடிவுகளை முன் மாதங்களிலிருந்தே அமுலுக்குக் கொண்டுவரவும் சர்க்கார் வாக்குறுதி அளித்துள்ளது. சம்பள விஷயமாக முந்திய போக்குவரத்து மந்திரி லால் பகதூர் சாஸ்திரி கொடுத்த வாக்குறுதிகள் நிறைவேற்றப்படும் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இன்றைய பேச்சுவார்த்தைகளில் ஏ. எஸ். கே. அய்யங்கார், எஸ். சி. சி. அந்தோணிப் பிள்ளை உள்பட சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்கள் ஏழு பேர்களும், கொச்சி துறைமுகத் தொழிலாளர் சங்கத்தலைவர் ராகவனும், போக்குவரத்து மந்திரி எஸ். கே. பாடீல், கப்பல் மந்திரி ராஜ்பகதூர், பிரதம மந்திரி ஆகியோர் கலந்துகொண்டனர்.

வேலைநிறுத்த வாபஸ் முடிவை தொழிற்சங்கத் தலைவர்கள் தங்கள் தங்கள் யூனியன்களுக்கு அறிவித்துள்ளனர்.

இந்த செய்தி சர்க்கார், வர்த்தக, தொழிலாளர் வட்டாரங்களில் மகிழ்ச்சியை உண்டுபண்ணியுள்ளது.

## சென்னை துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்து மதுரையில் 2000 பேர் ஊர்வலம்

மதுரை, ஜூன் 20—

தங்களுடைய நியாயமான கோரிக்கைகளுக்காக வேலை நிறுத்தம் செய்த சென்னை துறைமுகத் தொழிலாளர்மீது காங்கிரஸ் சர்க்காரின் நியாய விரோதமாக நடத்திய துப்பாக்கிப் பிரயோகத்தில் உயிரிழந்தவர்களுக்கு அஞ்சலி செலுத்தும்பொருட்டும்காங்கிரஸ் சர்க்காரின் தொழிலாளர் விரோத கொள்கையை கண்டிக்கும் பொருட்டும் மதுரையிலுள்ள ஏ. ஐ. டி. யு. சி. தொழிற் சங்கங்களின் சார்பாக 18-6-58ல் டவுன் ஹால் ரோடிலிருந்து 2000 பேர் கொண்ட ஊர்வலம் புறப்பட்டு திலகர் திடலை அடைந்தது. குறுகிய கால அறிவிப்பாக இருந்தாலும் தொழிலாளர்கள் அதிகமாக கலந்துகொண்டு "காங்கிரஸ் சர்க்காரின் அடக்குமுறை ஒழிக, தொழிலாளர் இயக்கங்களை துப்பாக்கி முனையில் அடக்காதே, உயிரிழந்தவர்களுக்கு நஷ்டயீடு வேண்டும், தொழிற்சங்க உரிமைகளை பறிக்காதே" என்ற கோஷங்களை உணர்ச்சி பூர்வமாக உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து கோஷமிட்டுக்கொண்டு சென்றனர்.

### பொதுக் கூட்டம்

திலகர் சதுக்கத்தில் நடந்த பொதுக் கூட்டத்திற்கு மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் உபதலைவர் எம். என். ஆதிநாராயணன் அவர்கள் தலைமை வகித்தார். துப்பாக்கிப்பிரயோகத்தில் உயிரிழந்தவர்களும் அஞ்சலி செலுத்தும் வகையில் முதன் முதலாக தீர்மானம் பிரேரேபிக்கப்பட்டு உயிரிழந்த தியாகிகளுக்கு கூட்டத்திலிருந்தவர்கள் எழுந்து இரண்டு நிமிடநேரம் அஞ்சலி செலுத்தினர். அதன் பின் துறைமுகத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஆதரிக்கும் வண்ணம் மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தோழர் ஆதிநாராயணன் பேசியபின், மதுரை மோட்டார் லேபர் யூனியன் சார்பாக தோழர் பி. மன்னர்சாமியும், பிரஸ் லேபர் யூனியன் சார்பாக தோழர் பி. சொக்கலிங்கமும், முனிசிபல் தொழிலாளர் சங்கத்தின் சார்பாக எம். மதுரை வீரனும், சதர்ன் ரயில்வே லேபர் யூனியன் சார்பாக தோழர் கணேசனும், மதுரை ஜெனரல் ஒர்க்ஸ் யூனியன் சார்பாக எஸ். காமராஜும், மதுரை நகர கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாக ஏ. பி. பழனிச்சாமியும், தமிழரசுக் கழகத்தின் சார்பாக கல்யாணசுந்தரமும் சோஷலிஸ்ட் கட்சியின் சார்பாக லெட்சுமணனும் பேசினர்.

## ஜனசக்தி நிதிக்கு வெள்ளி டம்ளர்

நாகை, ஜூன் 25—

தோழர்கள் எம். ஏ. ஹமீது—சுபேதாம்மாள் திருமண விழாவின் போது ஜனசக்தி கட்டிட நிதிக்காக ரூ. 4-2-6 எடையுள்ள 10. ரூபாய் மதிப்புள்ள வெள்ளி டம்ளர் நன்கொடை யளிக்கப்பட்டது.

### கேரளத்தில்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

அமைக்கவும் போர்டு அங்கீகரித்துள்ளது. இந்த வருடம் ஜனவரி 1-ம் தேதி வரை உள்ள தொழிற் சங்கங்களும் அதன் பின்னர் பதிவு செய்து கொண்ட சங்கங்களும் இந்தப் பேச்சுவார்த்தை ஸ்தாபனங்களில் பிரதிநிதித்துவம் பெறும் அருகதை உள்ளவைகளாக இருக்கும். ஒரு தொழிற்சாலையில் ஒன்றுக்கு மேற்பட்ட யூனியன்கள் இருந்தால் அவற்றின் பிரதிநிதித்துவத் தன்மை இரகசிய வோட்டெடுப்பு மூலம் நிர்ணயிக்கப்படும்.

இவைபோன்ற யோசனைகளெல்லாம் அடங்கிய ஒரு மசோதா சீக்கிரமே தயாரிக்கப்பட்டு ஒரு முக்கூட்டு மகாநாட்டில் சமர்ப்பிக்கப்படுவதோடு, மத்திய சர்க்காரின் அனுமதியோடு சட்ட சபையில் சமர்ப்பிக்கப்படும்.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

### துரிதமாக...

கக்கூடாது என்றும், கேஸ்களை வாபஸ் வாங்கவேண்டுமென்றும்" கேட்டோம்.

யாரும் பழிவாங்கப்பட மாட்டார்களென்றும், பலாத்கார கேஸ்களைத் தவிர மிச்சமெல்லாம் வாபஸ் வாங்கப்படுமென்றும், கேஸில் உள்ளவர்களும் விடுதலையாகி வந்தால் அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுமென்றும், நேரு வாக்குறுதியளித்தார்.

### வேலைநிறுத்தம் வாபஸ்

சம்மேளனத் தலைவர்கள் நேருவிடம் பேசுகையில் "வேறு யாரையும்விட தேச பக்தியில் தொழிலாளர்கள் சளைத்தவர்கள் அல்லவென்றும், நாட்டின் முன்னேற்றத்தைக் கருதியும், உணவு நெருக்கடியை உத்தேசித்தும், நேருவின் அனுதாப ஆதரவு இருக்கிறது என்பதினாலும் வேலைநிறுத்தத்தை வாபஸ் செய்வதாக" முடிவு செய்தனர்.

அகில இந்திய ரீதியாக வேலைநிறுத்தம் நேற்று மாலை $7\frac{1}{2}$ மணிக்கே வாபஸ் செய்யப்பட்டது என்றாலும், ஒவ்வொரு துறைமுகத்திலும் ஏற்படுத்தப்பட்டுள்ள ஸ்ட்ரைக் கமிட்டிகள் கூடி முடிவு செய்வதுதான் முறையாகவும், ஸ்தாபன ரீதியாகவும் இருக்குமென்று கருதப்பட்டது.

இதனடிப்படையில் சென்னையில் ஸ்ட்ரைக் கமிட்டி கூடி, ஸ்ட்ரைக்கை 26-ம் தேதி வாபஸ் வாங்கிக் கொண்டு 27-ம் தேதி பகல் ஷிப்டு காலை $6\frac{1}{2}$ மணியிலிருந்து தொழிலாளர்கள் வேலைக்கு செல்லுவார்கள். 15 நாட்களுக்குள் எல்லோரும் வேலைக்கு ஆஜராகி விடுவார்கள்.

## நடக்க இருப்பவை

### தங்கமணி பேசுகிறார்

நெய்வேலி: நெய்வேலி பழுப்பு நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் பொதுக்கூட்டம் 23-6-58 சனிக்கிழமை நடைபெறும். நெல்லிக்குப்பம் தோழர் சி. கோவிந்தராஜன் தலைமையில் தோழர் கே. டி. கே. தங்கமணி (எம். பி.) பேசுவார்.

## காங்கிரஸ் திருந்தவேண்டும் அல்லது ஒழியவேண்டும்

### மைசூர் முன்னாள் முதன் மந்திரியின் பேச்சு

சித்திரதுர்கா, ஜூன் 24—

காங்கிரசில் ரொம்பவும் ஊழல்கள் மலிந்துவிட்டன. இந்நிலையில் ஒன்று காங்கிரஸ் தன்னைத் திருத்திக்கொள்ள முன்வரவேண்டும். அது சாத்தியமில்லையென்றால் காங்கிரசைக் கலைத்துவிடுவது மேல்.

இவ்விதம் மைசூர் முன்னாள் முதல் மந்திரி நிஜலிங்கப்பா இங்கு ஒரு கூட்டத்தில் பேசுகையில் தெரிவித்தார். முதல் மந்திரி பதவியை விட்ட பிறகு நான் நான்கு ஜில்லாக்களில் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தேன். எங்கும் இப்போதைய காங்கிரஸின் போக்கைப்பற்றி மக்கள் ரொம்பவும் அதிருப்தி அடைந்திருக்கிறார்கள் என்று அவர் மேலும் தெரிவித்தார்.

### தம்பி செம்புலிங்கத்திற்கு

தஞ்சாவூர் சென்று வைத்தியம் செய்து கொள்வதாக சொல்லிப் போன நீ. அங்கும் போகவில்லை இருக்குமிடமும் தெரியவில்லை எல்லோருக்கும் சதா உன்னைப்பற்றிய கவலையாகவே இருக்கிறது. உடனே உன் உடல் நலத்தையும் இருக்கும் முகவரியையும் தந்தியில் தெரிவிப்பதோடு தஞ்சாவூருக்கும் தெரியப்படுத்தவும்.

சி. மு. சிவம்,
காரைக்கால்.

# அமிருதசரஸ் முடிவுகளை அமுலாக்க

## சென்னையில் கூடிய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு கமிட்டி முடிவுகள்

சென்னை, ஜூன் 25—

1958 ஜூன் 17 முதல் 21 வரை கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாடு மாகாணக் கமிட்டிக் கூட்டம் சென்னையில் நடைபெற்றது. அமிர்தசரஸ் மகாநாட்டிற்குப் பிறகு நடைபெற்ற இந்த மாகாணக் கமிட்டிக் கூட்டம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். கட்சி ஸ்தாபனத்தில் உள்ள பல ஹீனங்களைப் போக்கி இந்திய அரசியலில் சிறந்த பணியாற்றும் முறையில் கட்சியின் வளர்ச்சிக்கான திட்டங்களை வகுத்தது அமிர்தசரஸ் மகாநாடு. அந்த முடிவுகளைத் தமிழகத்தில் அமுலாக்குவது எப்படி என்பதே பிரதானமாக இக் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது. அமிர்தசரஸில் நிறைவேற்றப்பட்ட புதிய கட்சி ஸ்தாபன விதிகளின் அடிப்படையில் தமிழ்நாடு முழுவதிலுமுள்ள கட்சி ஸ்தாபனங்களைத் திருத்தி அமைப்பது பற்றியும் இக்கூட்டம் விசேஷப் பரிசீலனை செய்தது.

மாகாணக் கமிட்டியின் 23 உறுப்பினர்களில் தோழர்கள் கே. அனந்தன் நம்பியார், எம். ரத்னம், எம். காத்தமுத்து இம் மூவரும் இக் கூட்டத்தில் கலந்து கொள்ள இயலவில்லை.

மாகாணக் கமிட்டிக் கூட்டம் ஆரம்பமானதுமே, தொழிற் சங்கத் தந்தை தோழர் சக்கரைச் செட்டியாரின் மறைவுக்கு ஆழ்ந்த அனுதாபம் தெரிவித்தும், வேலை நிறுத்தஞ் செய்த சென்னைத் துறைமுகத் தொழிலாளர்கள் மீது துப்பாக்கிப் பிரயோகஞ் செய்த போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்தும், துப்பாக்கிப் பிரயோகத்தில் உயிர்நீத்த தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தியும், அன்னார் குடும்பங்களுக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### தூத்துக்குடி உப-தேர்தல்

ஜூலை 25-ந் தேதி தூத்துக்குடி தொகுதியில் நடைபெறவிருக்கும் சென்னை சட்டசபை உபதேர்தலில் கட்சியின் அபேட்சகராகத் தோழர் எஸ்.ஏ முருகானந்தத்தை நிறுத்துவதென மாகாணக்கமிட்டி ஏகமனதாக முடிவு செய்தது. மாகாணக் கமிட்டி செயலாளர் தோழர் எம். ஆர். வெங்கட்ராமனும், நெல்லை ஜில்லாக் கமிட்டி செயலாளர் தோழர் ப. மாணிக்கமும் இத்தொகுதி பற்றி கொடுத்த விரிவான ரிப்போர்ட்டை விவாதித்தபின்பு தேர்தல் வேலைகளுக்கு எல்லா உதவியும் செய்ய செயற்குழுவிற்கு மாகாணக்கமிட்டி அதிகாரமளித்தது. மேலும் எல்லா கிளைகளிலிருந்தும் தேர்தல் நிதி திரட்டி அனுப்ப ஜில்லா கமிட்டிகளும் தாலுகா, நகரக் கமிட்டிகளும் விசேஷ முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.

### ஸ்தாபன மாறுதல்களும் கட்சி மாநாடுகளும்

புதிய கட்சி விதிகளின் அடிப்படையில் கிளைகள் முதல் மாகாணக் கமிட்டிகள் வரை எல்லாக் கமிட்டிகளும் திருத்தியமைக்கப்படவேண்டும். எல்லா மட்டங்களிலும் மகாநாடுகள் நடத்தி இந்த மாற்றத்தைக் கொண்டுவர வேண்டும்.

மகாநாடுகள் அனைத்தும் சிறப்பாக நடத்தப்பட வேண்டும். ஒவ்வொரு மகாநாட்டிலும் ஸ்தல வேலைகள் பற்றிய ரிப்போர்ட்டுகள் சமர்ப்பிக்கப்பட்டு விவாதிக்கப்பட வேண்டும். இன்று நடைபெறும் வேலைகளில் உள்ள குறைபாடுகளைக் களைந்தெறிவதற்கும், அமிர்தசரஸ் மகாநாட்டு முடிவுகளினடிப்படையில் வேலைகளைத் திருத்தியமைப்பதற்கும் பயன்படும் முறையில் இந்த விவாதங்கள் நடைபெற வேண்டும்.

நமது மாகாணத்தில் 20,000க்கு மேற்பட்ட அங்கத்தினர்கள் இருக்கின்றார்கள். ஆயிரத்துக்கு மேற்பட்ட கட்சிக் கிளைகளில் இவர்கள் திரண்டுள்ளனர். இந்த எல்லாக் கிளைகளின் பேரவைக் கூட்டங்களும் நடத்தி வேலைகள் முறையாக விவாதிக்கப்பட வேண்டும்.

இதேபோல தாலுகா, நகர கட்சி மகாநாடுகள் செப்டம்பர் இறுதிக்குள்ளும், அதன் பின்னர், ஜில்லா மகாநாடுகள் நவம்பர் இறுதிக்குள்ளும், இறுதியாக மாகாண மகாநாடும் நடைபெற வேண்டும். 1958 டிசம்பர் மாத இறுதிக்குள் இந்த மாநாட்டு வேலைகளைச் சிறப்புடன் முடித்து விடுவதென மாகாணக் கமிட்டி முடிவு செய்துள்ளது. இவ்வாறு எல்லா மட்டங்களிலும் நடந்தேறிய வேலைகளைப் பரிசீலிப்பதும், புதிய வேலைத் திட்டங்களை வகுத்துக் கொள்வதும் கட்சி வளர்ச்சிக்குப் பெரிதும் பயனளிக்கும்.

### கட்சிக் கல்வி

அமிர்தசரஸ் மாநாட்டின் முடிவையொட்டி கட்சி அணிகளின் அரசியல் தரத்தை உயர்த்துவதற்கான ஆரம்ப நடவடிக்கைகள் என்ற முறையில் கிளைக் காரியதரிசிகளுக்கும் தாலுகா, நகர்க் கமிட்டி உறுப்பினர்களுக்கும் 1958 செப்டம்பர் மாத இறுதிக்குள் அரசியல் வகுப்புகள் நடத்துவதென மாகாணக் கமிட்டி முடிவு செய்துள்ளது. ஜில்லாக் கமிட்டிகள் இதற்காக ஒவ்வொரு ஜில்லாவிலும் அரசியல் பள்ளிகள் நடத்துவதற்கு மாகாணக் கமிட்டியுடன் கலந்து ஏற்பாடுகள் செய்ய வேண்டும். ஐந்து தினங்கள் நடைபெறும் இந்த அரசியல் பள்ளிகளில் கட்சியின் அரசியற் கொள்கை, கட்சியின் புதிய அமைப்பு விதிகள், தொழிற்சங்க விவசாய அரங்க வேலைகள், மார்க்ஸிசத்தின் அடிப்படை அம்சங்கள் போன்ற முக்கிய விஷயங்கள் போதிக்கப்படும்.

### பத்திரிகைகளும், பிரசுரங்களும்

கட்சியின் கொள்கையை மக்களுக்கு எடுத்துச் சொல்ல நமக்கு மிகப் பெரிய வாய்ப்பளிக்கும் பத்திரிகை, பிரசுரங்கள் பற்றி மாகாணக்கமிட்டி விவாதித்தது. எல்லா கட்சிக்கிளைகளும் இவ்விஷயத்தில் போதுமான கவனஞ் செலுத்தவில்லையென்பதே இன்றைய நிலைமை. இன்னும் அதிகமான நல்ல பிரசுரங்கள் தேவை. ஜனசக்தியும் பெரிய அளவில் விரைவில் வரவேண்டும். பத்திரிகை, பிரசுரங்கள் விற்பனையில் ஒவ்வொரு அங்கத்தினர்களும் முழுக்கவனஞ் செலுத்துவது மிகமிக அவசியம். இவற்றையெல்லாம் கணக்கில் எடுத்துக்கொண்டு மாகாணக் கமிட்டி கீழ்க்காணும் முடிவுகளை எடுத்துள்ளது.

(அ) ஜனசக்தி விற்பனை இவ்வாண்டு இறுதிக்குள் 25 சதவிகிதம் உயர்த்தப்படவேண்டும்.

(ஆ) மத்தியக் கமிட்டியின் ஆங்கிலப் பத்திரிகைகளின் விற்பனையும் பெருமளவிற்கு அதிகப்படுத்தப்படவேண்டும்.

(இ) அரசியல் இலக்கிய-கலாச்சார விஷயங்களைத் தாங்கி வரும் தமிழ் மாதப்பத்திரிகை ஒன்றை விரைவில் கொண்டுவர வேண்டும்.

(ஈ) ஜனசக்தி பத்திரிகையை சில வாரங்களுக்குள் பெரிய அளவில் வெளியிடவேண்டும்.

(உ) ஜூலை மாதம் பூராவிலும் நமது பிரசுரங்களை விற்பனை செய்வதற்கான விசேஷ முயற்சிகள் எல்லாக் கமிட்டிகளாலும் எடுத்துக்கொள்ளப்படவேண்டும்.

(ஊ) மாதம் 2 அல்லது 3 கட்சிப் பிரசுரங்கள் தமிழில் வெளியிடப்படவேண்டும்.

### நகர சபைத் தேர்தல்கள்

சிறந்த முறையில் மக்களுக்குத் தொண்டாற்றவும், நகர முன்னேற்றத்திற்கான துரித நடவடிக்கைகளை எடுக்கவும் நகராண்மைக் கழகங்கள் திறமையாக நடத்தப்படவேண்டும். பிற்போக்காளரின் பிடிப்பை உடைத்தும், லஞ்ச ஊழல்களை ஒழித்தும் அதிக அதிகாரங்கள் பெற்றும் நகராண்மைக் கழகங்கள் இயங்குவது ஜனநாயக வளர்ச்சிக்கு அவசியம். ஆகவே, வருகிற நகரசபைத் தேர்தலில் இதை மனதில் கொண்டு ஜனநாயகவாதிகளுடன் ஒத்துழைத்து கம்யூனிஸ்ட் கட்சி போட்டியிட வேண்டும் என்று மாகாணக் கமிட்டி முடிவு செய்தது. ஜில்லாக் கமிட்டிகள் இது பற்றி விவாதித்து நகரக் கமிட்டிகளுக்கு வழிகாட்ட வேண்டும். முனிசிபல் தேர்தலின்போது நம் கட்சியின் தேர்தல் அறிக்கை ஒன்று வெளியிடுவதென்றும், இதைத் தயாரிக்க கீழ்க் கண்டவர் அடங்கிய உபகமிட்டி அமைப்பதென்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது. இக் கமிட்டியில் தோழர் எம்.ஆர். வெங்கட்ராமன் (கன்வீனர்), எம். கல்யாணசுந்தரம், கே. டி. கே. தங்கமணி, வி. சுப்பையா ஆகியோர் உள்ளனர்.

### அகில இந்திய விவசாய சங்க மகாநாடு

தமிழ் நாட்டில் நடைபெறவிருக்கும் அகில இந்திய விவசாயிகள் மகாநாடு வெற்றிகரமாக நடைபெறுவதற்குஎல்லாக்கட்சிக் கிளைகளும், கமிட்டிகளும் முழு முயற்சியில் ஈடுபட வேண்டும் என்று மாகாணக் கமிட்டி கேட்டுக் கொள்கிறது. அமிர்தசரஸ் மகாநாட்டில் விவசாய இயக்க வேலைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டதை நினைவு கூர்ந்து அவ்வியக்க வேலையில் ஈடுபடுவது அவசியம். அங்கத்தினர் இயக்கத்தை வெற்றிகரமாக நடத்தவும்,விவசாய இயக்கத்தை புதுப் பகுதிகளுக்கு விரிவடையச் செய்யவும் கட்சிக் கிளைகள் உடனடித் திட்டமிட வேண்டுமென்றும் மாகாணக் கமிட்டி முடிவு செய்தது.

### பிரச்சார வேலைகள்

பொதுக் கூட்டங்களுக்குப் பேச்சாளர்களைக் கோரி கிளைகளும், நகர, தாலுகா கமிட்டிகளும் நேரடியாக மாகாணக் கமிட்டிக்கு எழுதுவதற்குப் பதிலாக ஜில்லாக் கமிட்டிகளுக்கே அவை எழுத வேண்டும், ஜில்லாவிலுள்ள பிரச்சார வேலைகளுக்கு ஜில்லாகமிட்டி மாகாணக் கமிட்டியுடன் கலந்து ஏற்பாடுகள் செய்யவேண்டும். புதிய பேச்சாளர்களை அறிமுகப் படுத்துவதற்கு விசேஷ கவனம் செலுத்தவேண்டும்.

### மாகாணக் கமிட்டி வேலைகள்

விரிவடைந்துவரும் பொறுப்புக்களைச் சரிவர நிறைவேற்றவும், கட்சிக் கல்வி, விவசாய இயக்கம், தொழிற்சங்க வேலைகள், பத்திரிகை, பிரசுரங்கள் போன்ற முக்கிய விஷயங்களைப் பரிசீலித்து வழிகாட்டவும் மாகாணக் கமிட்டியின் பொறுப்பில் இயங்கும் கீழ்கண்ட உபகமிட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன:

(அ) ஆசிரியர் குழு: ப. ஜீவானந்தம் (கன்வீனர்), பி. ராமமூர்த்தி, எம்.ஆர். வெங்கட்ராமன், கே. முத்தையா.

(ஆ) தொழிற்சங்க அரங்க உபகமிட்டி: பி. ராமமூர்த்தி (கன்வீனர்), கே. டி. கே. தங்கமணி, என். கே. கிருஷ்ணன், கே. அனந்தன் நம்பியார், ஏ. பாலசுப்பிரமணியம், ஏ. எஸ். கே. அய்யங்கார்.

(இ) விவசாய அரங்க உபகமிட்டி: மணலி கந்தசாமி (கன்வீனர்), பி. சீனிவாசராவ், எம். காத்தமுத்து, பி. ராமச்சந்திரன், ஆர். எச். நாதன்.

(ஈ) கட்சிக் கல்வி உபகமிட்டி என். சங்கரய்யா (கன்வீனர்), வி. பி. சிந்தன், கே. முத்தையா, பி. மாணிக்கம்.

(உ) பிரசுர உபகமிட்டி: எம். ஆர். வெங்கட்ராமன் (கன்வீனர்), ப. ஜீவானந்தம், என். சங்கரய்யா.

(ஊ) ஒழுங்கு நடவடிக்கை உபகமிட்டி: பி. சீனிவாசராவ் (கன்வீனர்), என். கிருஷ்ணசாமி, கே. ரமணி.

மேலும் மாகாணக் கமிட்டி வேலைகளைச் சரிவர நிறைவேற்றுவதற்கு தோழர்கள் எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராமமூர்த்தி, ப. ஜீவானந்தம், பி. சீனிவாசராவ், என். சங்கரய்யா, மணலி கந்தசாமி, வி. பி. சிந்தன் ஆகியோர் அடங்கிய ஒரு செயற்குழுவையும் மாகாணக்கமிட்டி அமைத்தது தேசிய கவுன்சில் உறுப்பினரான தோழியர் பார்வதி மாகாணக் கமிட்டியில் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

நீலகிரி ஜில்லாவில் உள்ள கட்சி வேலைகளைக் கவனிக்க அங்கு ஒரு தனி ஜில்லாக் கமிட்டி அமைக்கப்பட வேண்டுமென்று மாகாணக் கமிட்டி முடிவு செய்துள்ளது.

### இதர பகுதிகளில்

தமிழ் எழுத்தாளர்கள், மாதர்கள், மாணவர்கள் போன்ற பகுதிகளில் நமது வேலைகளைப் பரிசீலனை செய்வதற்கான ஏற்பாடுகளும் மாகாணக் கமிட்டியில் தீர்மானிக்கப்பட்டுள்ளன.

கட்சி வேலைகளிலுள்ள பல வீனங்களைப் போக்கி, பலம் வாய்ந்த ஒரு கட்சி ஸ்தாபனத்தை அமைக்க மாகாணக் கமிட்டி எடுத்துள்ள முடிவுகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவை. வெகுஜன ஸ்தாபன வேலைகளில் அமிர்தசரஸ் காட்டிய வழியில் முன்னேறுவதற்கும், மாகாணக் கமிட்டியின் முடிவுகள் பயனளிக்கும். இந்த முடிவுகளை அமுலாக்க கட்சியின் சகல உறுப்புக்களும், அங்கத்தினர்களும் பணியாற்றுவது மிகவும் அவசியம்.

---

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தெந்த சந்துகளிலும் நடந்தது? போலீஸார் இருந்த இடத்துக்கும் கூட்டத்தினர் இருந்த இடத்திற்கும் எவ்வளவு தூரம்?" என்பன போன்ற கேள்விகளுமே பிரதான மாக இருந்தன.

மோகனின் கேள்விக்கு இன்ஸ்பெக்டரின் பதிலாவது:

### மறியல் நடந்த இடம்

"ஜூன் 16 காலை 7-15 மணிக்கு துறைமுக வாசலில் கூட்டமாக இருந்தது. போலீஸார் இருந்த இடத்துக்கு மேற்கே ஜனக்கூட்டம் இருந்தது. வடபாகத்திலும் இருந்தது. டெலிபோன் பெட்டிக்கு வடக்கே 15, 20 கெஜ தூரத்திலும், தெற்கே 20 கெஜ தூரத்திலும் கூட்டம் இருந்தது. நடைபாதையிலுமிருந்தார்கள். ரோடிலுமிருந்தார்கள், மேற்கே போலீஸார் இருந்த இடத்துக்கு 30, 40 அடி தூரத்தில் ஜனங்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

லாரி வந்தபோது அதன் முன் தொண்டர்கள் படுத்துக் கொண்டார்கள்.

ஒரு நிமிஷத்தில் கலகம் ஏற்பட்டதாகக் கொடி காட்டப்பட்டது. சட்டவிரோதமான கூட்டம் என்று கமிஷனர் எச்சரிக்கை செய்தார். ஒரு நிமிடம் முடிந்தவுடன் தடியடி நடந்தது. அடுத்த ஒரு நிமிஷத்தில் கண்ணீர்ப் புகை வெடிகள் சுடப்பட்டன.

அடுத்த நிமிஷத்தில் துப்பாக்கியால் சுட உத்தரவு கொடுக்கப்பட்டதா என்று மோகன் கேட்டார்,

எல்லாம் 20, 25 நிமிஷங்களுக்குள் நடந்தது என்றார் இன்ஸ்பெக்டர்.

இருபது இருபத்தைந்து நிமிஷங்களில் ஒன்றன்பின் ஒன்றாக நடந்ததா என்று மோகன் கேட்டார்.

அதெல்லாம் கூறமுடியாது 20, 25 நிமிடங்களில் நடந்தது என்றார் இன்ஸ்பெக்டர்.

எண்ணாயிரம் பேர் கூட்டமாகக் கோஷம் போட்டுக் கொண்டிருந்ததாக இன்ஸ்பெக்டர்கூறினர். கூட்டம்தான் நின்ற இடத்திலிருந்து 40-50 அடி தூரத்தில் இருந்ததாயும், துப்பாக்கிப் பிரயோகத்திற்குப் பிறகு 100 முதல் 120 அடி தூரத்திற்கு பாதை ஏற்பட்டதாயும் கூறினர். 120 அடிக்கு அப்பாலும் 2000 பேர் கூட்டம் இருந்தது கிருஷ்ணன் கோவில் தெருவில் புகுந்தபோது கூட்டம்போலீசுக்கு 20 கஜதூரத்தில் இருந்தது என்றார்.

மற்ற சந்துகளில் நின்றிருந்த கூட்டத்தை நிர்ணயிக்க முடியாது என்று கூறிய இன்ஸ்பெக்டர் துப்பாக்கிப் படை ஜாபர் சராங் தெரு சந்தியில் நின்றதாயும் கூட்டம் நெருக்கமாக இருந்த இடத்தில் துப்பாக்கிப் பிரயோகம் நடந்ததாயும் மரக்கார் லெப்பைத் தெரு தண்ணீர்க் குழாய்க் கருகில் ஒருவர் காயமுற்று விழுந்து விட்டதாயும் கூறினர்.

வேலை நிறுத்த காலத்தில் வேறு ஆட்களைக் கொண்டு வர போர்ட் டிரஸ்ட் ஏற்பாடு செய்திருப்பதாகத் தமக்குத் தெரியாது என்று வழக்கறிஞர் ஜான் தாமஸ் கேட்ட கேள்விக்கு இன்ஸ்பெக்டர் பதிலளித்தார். லாரிகளைப் போலீசார் ஓட்டி வந்தார்களா என்பதைப் பார்க்கவில்லை என்றார்.

கிருஷ்ணன் கோவில் தெருவில் அந்தோணிப் பிள்ளை காரைப் பார்க்கவில்லை அதைப் போலீஸ் தகர்த்துவிட்டதா என்பதுபற்றியும் தெரியாது என்று அவர் கூறினர்.

கலகம் என்று காட்டும் கொடி உயர்த்தப்படவே இல்லை என்று வழக்கறிஞர் வாதித்தார். ஆனால் கலகக் கொடி நாட்டப்பட்டுக் கடைசி வரையில் பறந்ததாக இன்ஸ்பெக்டர் கூறினர். கொடி கோர்ட்டில் காட்டப்படும்வரை பொறுக்குமாறு நீதிபதி கேட்டுக் கொண்டார்.

---

## வெட்டுவாக்கோட்டை பஞ்சாயத் தேர்தலில்

### போட்டியின்றி கம்யூனிஸ்டுகள் வெற்றி

வெட்டுவாக்கோட்டை, ஜூன் 19—

நேற்று இங்கு நடைபெற்ற பஞ்சாயத்துத் தேர்தலில் (1) வி. ராமசாமித் தேவர், (2) பி. ராமசாமி, (3) சு. சின்னையன், (4) வீ. சின்னத்தம்பி, (5) சி. பெரமன், (6) ஆர். சேதுராஜம் பிள்ளை, (7) திங்கப்பா சோழகர், (8) சி. பெரமக் கோனர், (9) கோவிந்தசாமி ஆகிய கம்யூனிஸ்டுகளும், வீ. தங்கவேல், ரெ. கருப்பக் கோனர், மாரியப்பன் ஆகிய விவசாய சங்க அங்கத்தினர்களும், அருணாசலம் பிள்ளை, ஆ. செல்லன் ஆகிய ஆதரவாளர்களும், ஆ. பெரம வெட்டுவார் என்ற சுயேச்சையாளரும் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### சாத்தூர்

16 6-58ல் நடைபெற்ற சாத்தூர் பஞ்சாயத்துத் தேர்தலில் தோழர் எம். எஸ். துரைச்சாமி அமோக வெற்றியுடன் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். அவருடன் போட்டியிட்ட காங்கிரஸ், சுயேச்சை அபேட்சகர்கள் படுதோல்வியடைந்தனர்.

வெற்றிச் செய்தி கிடைத்ததும் 17-6-58 இரவு 9 மணிக்கு வெற்றி ஊர்வலம் நடைபெற்றது.

---

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32, Broadway, Madras-1.
Editor: P. JEEVANANDAM